REGD No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812818 4 பக்கம் விலை 35 காசு



கருத்து

வெளியிடாமல் மனத்திலே மட்டும் உள்ள கருத்து மனித நன்மைக்கு ஏற்றதல்ல அது நாட்டிலே உள்ள ஒரு குறை.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

கடமை

மக்களுக்கு நாணயமாக நடுநிலையாகத் தொண்டாற்றுவதும், தயவு தாட்சண்யம், அனுதாபம் ஆகியவை களுடன் மக்களிடம் நடந்துகொள்வதும் அதிகாரிகளின்கடமை யாகும்.

-தந்தை பெரியார்



● மலர் 4 சென்னை 24—9—1980 புதன் —:(✻):— வெளியீடு 25—9—1980 வியாழன் இதழ் 316 ●

## மின் திருட்டு தடுப்புச் சட்டம்

# வாபஸ் இல்லை

## 'சிறு விவசாயிகள் நலனை இந்த அரசு நிச்சயம் காப்பாற்றும்'

### முதல்வர் திட்டவட்ட அறிவிப்பு

**சென்னை, செப். 24- விவசாயிகள் பிரச்னை குறித்துப் பேச்சுவார்த்தை நடத்த விவசாயிகள் சங்கத் தலைவர் நாராயணசாமி நாயுடு விதித்து இருக்கும் நிபந்தனைகளுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் பதில் அளித்துள்ளார்.**

**மின்சாரத் திருட்டுக்கு அதிக தண்டனை அளிக்கும்சட்டத்தை வாபஸ் பெற முடியாது என்று முதல்வர் தெரிவித்தார். ஏழை சிறு விவசாயிகளை இந்த அரசு நிச்சயம் காக்கும் என்றும் முதல்வர் கூறினார்.**

கலைவாணர் அரங்கில் ஆட்டோ ரிக்ஷாக்களை வழங்கும் விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர் பேசியதாவது:

கடனைத் திருப்பித்தரும் பிரச்சினை பற்றி இங்கே பேசப்பட்டது.

விவசாயிகள் கடன் பிரச்சினைபற்றி விவசாயிகள் சங்கத்தலைவர் நாராயணசாமிநாயுடுவைச் சந்திப்பதுபற்றி நான் கூறினேன்.

அவர் என்னை சந்திக்க மறுத்தாலும், நான் அவரது வீடு சென்று நானகைச் சந்திப்பேன் என்று கூறினேன்.

வீட்டுக்கு வந்து பார்க்க வந்தால் வராதே என்று சொல்லிவிடுவார்களா?

மின்சார உற்பத்திச் செலவு ஒருயூனிட்டிக்கு 43 காசு- 45 காசு என்று ஆகிறது.

ஆனல் நாம் பெரிய விவசாயிகளுக்கு 14 காசுக்கும், ஏழை விவசாயிகளுக்கு 12 காசுக்கும் மின்சாரத்தைக் கொடுத்துவருகிறோம்.

எவ்வளவு நட்டத்திற்கு கொடுக்கிறோம் என்று சிந்தித்துப் பாருங்கள்.

5 ஏக்கருக்கு கீழே இருக்கும் நிலச்சொந்தக்காரர்களது கடனை தீர்த்துவைப்போம் என்று அரசின் சார்பில் பல முறை சொல்லி வந்திருக்கிறோம்.

ஆனல் மின்சாரத்தை துண்டித்தால் அதற்காக போராடுவோம் என்கிறார்கள்.

### இப்படி பேசலாமா?

அதிகாரிகள் வந்து மின்சாரத்தை துண்டிக்க வந்தால் அடித்து விரட்டுவோம் என்று சொல்கிறார்கள் இதுஎன்ன நியாயம்?.

நன்மைகளைச் செய்வதற்கு தீமை செய்வது சரியா?

லட்சாதிபதிகள் அரசுக்குத் தரவேண்டிய கடனைத் தராமல் இருப்பது சரியா? விவசாயிகள் சங்கம் போராட்டம் நடத்துவது என்ன நியாயம்?

மின்சாரம் திருடினல் 3 ஆண்டு சிறை தண்டனை என்ற சட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறோம்.

அந்த சட்டத்தைவாபஸ் பெற்றால் தான் பேச முடியும் என்று நாயுடு சொல்லி இருக்கிறார்.

பார்க்க வந்தாலும் பார்க்க மாட்டேன் என்று சொல்லிஇருக்கிறார். நான் முதல்வராக இருந்தாலும் மக்கள் அந்தப் பதவியைத்தந்து இருந்தாலும் தொடர்ந்து சந்திக்க தயார் என்று கூறினேன்.

ஆனல் அவர் இந்த சட்டத்தை வாபஸ் பெற வேண்டும் என்று நிபந்தனை விதித்து இருக்கிறார்.

### வாபஸ் கிடையாது

இனி பேசுவதற்கே இடம் இல்லை.

அவர் அப்படிச் சொல்லி விட்டார்ஆனல்சட்டத்தை வாபஸ் பெற மாட்டோம்.

பெரிய பெரிய தொழிற்சாலைகள் மின்சாரத்தை திருடுகின்றன. அதைத் தடுக்கவே இந்த சட்டத்தைக் கொண்டுவந்துள்ளோம்.

லட்சக்கணக்கில் மின்சாரத்தை திருடுவதாகச் சொல்லப்படுகிறது. பெரிய விவசாயிகளும் மின்சாரத்தை திருடுகிறார்களா?

ஆனல் நாயுடு இந்த சட்டத்தை வாபஸ் பெற வேண்டும் என்று கேட்கிறார்.

கொலை செய்தால் தண்டனை என்று இருக்கிறது. நான் கொலை செய்யப் போகிறேன் ஆகவே அந்தச் சட்டத்தை ரத்து செய் என்று கேட்க முடியுமா?

கிராமத்து ஏழை விவசாயிகள் கடன் பெறவழி

(8-ம் பத்தி பார்க்க)

## பாலு மகேந்திராவுக்கு ஷோபாவின் தாயார் நோட்டீஸ்

சென்னை, செப். 24-- இந்தியாவில் சிறந்தநடிகையாக ஷோபா பெற்ற பரிசு தனக்குரியது என்று அவரது தாய் பிரேமா பாலுமகேந்திராவுக்கு நோட்டீஸ் அனுப்பியுள்ளார்.

"பசி" படத்தில் நடித்ததற்காக சிறந்த நடிகைக்கு உரிய பரிசு பெறுவதற்கு ஷோபாவும் பாலுமகேந்திராவும் டெல்லி சென்றிருந்தனர். அந்தப்பரிசைபாலு மகேந்திரா வைத்திருப்பதாகத் தெரிகிறது.

மகள் ஷோபா பெற்ற பரிசு தனக்கு உரியது; அதைத் தன்னிடம் கொடுத்துவிட வேண்டுமென்று பாலு மகேந்திராவுக்கு ஷோபாவின் தாய் பிரேமா நோட்டீஸ் அனுப்பியுள்ளார்.



## பெண் போலீஸ் காதல்திருமணம்

சென்னை, செப். 24- சென்னைநகர பெண் போலீசில் பணிபுரியும் ராஜேஸ்வரி (வயது 23) போலீஸ் கான்ஸ்டேபிள் காசி (வயது 27) என்பவரை காதலித்து திருமணம் செய்து கொண்டார்.

சிந்தாதிரிப் பேட்டை போலீஸ் நிலையத்தில் பணி புரியும் காசிக்கும் பெண் போலீஸ் பிரிவில் பணி புரியும் ராஜேஸ்வரிக்கும் காதல் ஏற்பட்டுபெற்றோர் சம்மதத்துடன் கோவிலில் திருமணம் நடைபெற்றது.

முதல்வர் புரட்சித்தலைவர் டெல்லி சென்றிருந்தபோது மத்திய நிதியமைச்சர் ஆர். வெங்கட்ராமனை சந்தித்த போது எடுத்த படம்.

## மொழிக் கொள்கை எங்கே? எங்கே?

### ப. உ. ச. கடிதம்

பேரன்புடையீர்,

நாடாளுமன்ற உறுப்பினர்களும், சட்டப் பேரவை உறுப்பினர்களும் வெளிநாடுகள் காணச் சென்ற வண்ணம் உள்ளனர். சிலர் சென்றுள்ளார்கள். சிலர் சென்று திரும்பிவிட்டார்கள். வேறு சிலர் செல்ல உள்ளார்கள்!

அனைவருக்கும் நல்வாழ்த்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வெளிநாடு சென்று சுற்றுவர வேண்டியவைகளும் உள்ளன! கற்றுத்தந்து வரவேண்டியவைகளும் உள்ளன!

**எந்த கனிப்பொருளும் இல்லாத நாடுகள் வாழ்கின்றன செழிப்போடு!**

எல்லா கனிப்பொருளும் கொண்ட நம் நாடு அந்த நாடுகளிடமிருந்து எல்லாவற்றையும் எதிர் பார்க்கிறது!

இரும்புத்தூளை ஏற்றுமதி செய்கிறோம்! இயந்திரங்களாக அவைகளை மாற்றி அனுப்புகிறார்கள். போட்டி போட்டு வாங்குகிறோம்!

**முப்பத்திமூன்று ஆண்டு சுதந்திர ஆட்சியில் தேவைக்கு மேல் நாம் உற்பத்தி செய்திருப்பது மக்கள் தொகை!**

ஏற்றுமதி செய்வது கனிப்பொருள்கள்!

இறக்குமதி செய்வது இயந்திரங்கள்!

வெளிநாடு செல்பவர்கள் அண்ணல் காந்தியடிகளைப்போல் சத்தியம் செய்து செல்லவேண்டியதில்லை! ஆனல் காந்தி நாட்டில் இப்படித்தான் உள்ளனர் போலும் என்று அவப்பெயரைத் தேடித் தராதிருந்தால் போதும்!

அயல்நாடுகளுக்குச் சென்று தந்தை பெரியார் பகுத்தறிவு விருந்தளித்தார்! அறிஞர்

(2-ம் பக்கம் பார்க்க)

பாரபட்சப் போக்கு:

# சென்னை டி. வி. க்கு மத்திய அரசு நோட்டீஸ்: ப. உ. ச.வுக்கும் கடிதம்

**சென்னை, செப். 24-சென்னை டெலிவிஷன் நிலையத்தின்மீது கழகம் கூறிய குற்றச்சாட்டு தொடர்பாக சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் மத்திய அரசு விளக்கம் கேட்டிருக்கிறது.**

தமிழக அரசு சார்பில் கொண்டாடப்பட்ட அண்ணா பிறந்தநாள் நிகழ்ச்சிகளை ஒளிபரப்புவதில் சென்னை டெலிவிஷன் நிலையத்தார் பாரபட்சமாக நடந்து கொண்டது தெரிந்ததே.

இதை எதிர்த்துப் போராட்டம் நடத்தப் போவதாக கழகத்தின்சார்பில் ஜேப்பியார் எம். எல். சி. அறிவித்திருந்தார்.

சென்னை டெலிவிஷன் நிலையத்தினரின் இந்தப் பாரபட்சமான போக்கு குறித்து தலைமைக் கழகத்தின் சார்பில் மத்திய அரசுக்குக் கடிதம் எழுதப் பட்டது.

அந்தக் கடிதத்துக்குப் பதிலளித்து கழகப் பொது செயலாளர் ப. உ. ச.வுக்கு மத்திய தகவல் ஒலிபரப்பு துறை அமைச்சர் வசந்த் சாத்தே கடிதம் எழுதியிருக்கிறார்.

அந்தக் கடிதத்தில் மத்திய அமைச்சர் கூறியிருப்பதாவது:

அறிஞர் அண்ணா அவர்களின் பிறந்தநாள் விழாவை சென்னைதொலைக் காட்சி நிலையத்தில் உரிய முறையில் ஒளிபரப்பத் தவறியதற்காக எனது வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் விளக்கம் கோரப்பட்டிருக்கிறது. அவர்களிடமிருந்து விளக்கம் வந்ததும் தொடர்ந்து தொடர்பு கொள்கிறேன்.

இவ்வாறு அந்தக் கடிதத்தில் மத்திய அமைச்சர் சாத்தே கூறியிருக்கிறார்.

### போராட்டம் ஒத்திவைப்பு: ஜேப்பியார் அறிக்கை

டி. வி. எதிர்ப்பு போராட்டம் தொடர்பாக ஜேப்பியார் எம். எல். சி. இன்று ஒரு அறிக்கையை வெளியிட்டுள்ளார். அதில் அவர் கூறியிருப்பதாவது:

சென்னை டெலிவிஷன் நிலையத்தின் மீது கழகம் கூறிய புகாரைத் தொடர்ந்து மத்திய அமைச்சரிடமிருந்து கழகப் பொதுச் செயலாளருக்குக் கடிதம் வந்திருக்கிறது. சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் விளக்கம் கேட்கப்பட்டிருப்பதாகவும், விளக்கம் வந்த



பிறகு திரும்பவும் நம்மிடம் தொடர்பு கொள்வதாகவும் அந்த கடிதத்தில்கூறப்பட்டிருக்கிறது.

எனவே, மத்திய அரசிடமிருந்து வரவேண்டிய பதில் வரும் வரையில் போராட்டம்ஒத்திவைக்கப்பட்டுள்ளது. மத்திய அரசின் பதில் மற்றும் அது எடுக்கின்ற நடவடிக்கைகளைப் பொறுத்துபோராட்டம் பற்றிய இதர விவரங்கள் பின்னர் அறிவிக்கப்படும்.

இவ்வாறு ஜேப்பியார் தமது அறிக்கையில் கூறியிருக்கிறார்.

# திருவொற்றியூரில் திமுக குண்டர்கள் தாக்கி கழகத் தோழர் கொலை

**சென்னை, செப். 24. சென்னையை அடுத்த திருவொற்றியூரில் தி மு க குண்டர்கள் தாக்கியதில் கழகத் தோழர் ஒருவர் பரிதாபமாக மரணமடைந்தார்.**

திருவொற்றியூரைச் சேர்ந்த கழகத் தோழர்கள் கே. குப்பன், கே. செல்வமணி, துரை, பிச்சை செல்வராஜ், காத்தவராயன்,

அதே ஊரைச் சேர்ந்தவர் லோகநாதன். இவர் முன்னாள் தி.மு.க. கவுன்சிலர். இவர் கழகத் தோழர்களிடம் வந்து தி.மு.க. இளைஞர் அணியில் சேரும்படி வற்புறுத்தினாராம். ஆனல் தி.மு.க. இளைஞர் அணியில் சேர கழகத்தோழர்கள் மறுத்து விட்டனர்.

இதனல் ஆத்திரமடைந்த சில தி. மு. க. குண்டர்கள் சேர்ந்து கழகத்தவராகிய துரை, செல்வராஜ், பிச்சை, காத்தவராயன் ஆகியவர்களைக் கடுமையாகத் தாக்கினார்கள்,

இந்தத்தாக்குதலில் படுகாயமடைந்த கழகத் தோழர் துரை ஸ்டான்லி மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு அங்கு பரிதாபமாக இறந்து விட்டார்.

இந்தக் கொலை தொடர்பாக தி.மு.க.வைச்சேர்ந்த கே. சின்னக்குப்பன், ஜி. ராமு, செல்வம் ஆகியோர் தலைமறைவாகி விட்டார்கள்.

படுகொலைக்காளான துரைக்குமனைவியும்நான்கு பெண் குழந்தைகளும் இருக்கின்றனர்.

### பொதுச் செயலாளர் ப. உ. ச. சுற்றுப்பயணம்

4.10.80 திருச்சி
5.10.80 புதுக்கோட்டை
6.10.80 துறையூர்

(4-ம் பத்தி தொடர்ச்சி)

இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள்.

வசதி படைத்த பெரிய நிலச்சுவான்தார்கள்கடனை திருப்பித்தந்தால் தானே இவர்களுக்கு கடன்தர முடியும்.

வசதி உள்ளவர்கள் கடனைத் திருப்பித்தர வேண்டும்.

முடியாதவர்கள் தாமதமாகத் தரட்டும். வாங்கிய கடனைக் கட்டாததால் ரிசர்வ் வங்கி கடன்தர மறுக்கிறது.

அதனல் கடன்தர முடியவில்லை.

ஏழை விவசாயிகள் தனிப்பட்ட பெரிய மனிதர்களிடம் அதிக வட்டிக்கு கடன் பெற வேண்டிய நிலை இருக்கிறது.

நாயுடுவின் திட்டத்தால் ஏழை விவசாயிகள்பாதிக்க படுகிறார்கள்.

ஆகவே பெரிய பணக்காரர்களிடம் இருந்து ஏழை விவசாயிகளைக் காப்பாற்றியாக வேண்டும்.

பெரிய விவசாயிகள் கடனைத் திருப்பித்தந்தால் ஏழை விவசாயிகளுக்கு கடன் தர முடியும்.

இப்படிப்பட்ட பிரச்சினைகளை எல்லாம் மக்களிடம் நாம் எடுத்துச் சொல்ல வேண்டும் இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

# கலவரம் தூண்டினல் ஜாமீனில் வரமுடியாது

புதுடெல்லி, செப். 24- ஜாதி சண்டையை தூண்டிவிடுபவர்களை கைது செய்த பிறகு அவர்களை ஜாமீனில் விடாமல் தடுக்கும் ஒரு புதிய அவசர சட்டத்தை ஜனதிபதி சஞ்சீவரெட்டி நேற்றுபிறப்பித்தார்.

ஜாதிசண்டையை தூண்டி, வகுப்புகலவரத்தை தூண்டுகிறவர்களை கைது செய்து சிறையில் அடைக்கும் தேச பாதுகாப்பு அவசரச் சட்டத்தைஏற்கனவே ஜனதிபதி பிறப்பித்தார்.

இதையொட்டி தற்போது மேலும் ஒரு அவசர சட்டத்தை நேற்று ஜனதிபதிசஞ்சீவரெட்டிபிறப்பித்தார். இந்த புதியஅவசரசட்டத்தின்படி ஜாதி சண்டையை தூண்டி வகுப்பு கலவரத்தை தூண்டுகிறவர்கள் கைது செய்யப்பட்டபிறகு அவர்கள் ஜாமீனில் விடப்படமாட்டார்கள்.

அவர்கள் ஜாமீனில் வெளியே வந்தால் வழக்கு தொடருவதில் தாமதம் ஏற்படுகிறது. விசாரணையும் பாதிக்கப்படுகிறது, இதை தவிப்பதற்காகவே அவர்கள் ஜாமீனில் வெளியே வருவது தடுக்கப்படுகிறது.

எனவேஇந்தபுதியஅவசர சட்டத்தின் படி இனி ஜாதி சண்டையை தூண்டி கைதாகிறவர்கள் ஜாமீனில் வெளிவர முடியாது.

இவர்களை கைது செய்யும் அதிகாரம் மத்திய அரசுக்கும் மாநில அரசுக்கும் மட்டுமே இதுவரை இருந்து வந்தது.

ஆனல் இனிமேல் மாவட்ட மாஜிஸ்திரேட்டுகளுக்கும் இந்த அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது,

இந்த அவசர சட்டம் இன்று முதல் அமுலாகும்.

### முதல்வர் புரட்சித்தலைவர் அறிவிப்பு

# கிராம தன்னிறைவுத் திட்டத்துக்கு போர்க்கால வேக நடவடிக்கை

**சென்னை, செப். 24- கிராமங்கள் தன்னிறைவுத் திட்டங்களை அமுல்படுத்த போர்க்கால வேகத்தில் நடவடிக்கைகளை எடுக்கத் தமிழக அரசு கருதி இருக்கிறது என்று முதல்வர் புரட்சித் தலைவர் கூறினார்.**

100 ஆட்டோ ரிக்ஷாக்களையும் 5 மினி லாரிகளையும் வழங்கி முதல்வர் புரட்சித் தலைவர் பேசியதாவது:

இங்கே பேசிய தொழிலாளர் அமைச்சர் தொழிலாளர் நலனுக்காக தமிழக அரசு என்னஎன்ன சட்டங்களை-கொள்கைகளை கொண்டுவர இருக்கிறது என்பதை விவரித்தார்.

பேரறிஞர் அண்ணா தந்த கொள்கையை நாம் நிறைவேற்றுகிறோம். ஜாதி-மத பாகுபாடு இன்றி உழைக்கும் மக்கள் அனைவருக்கும் நன்மை செய்வது நமது குறிக்கோள்.

அண்ணா அவர்கள் அடிக்கடி சொல்லி வந்தது போல யாதும் ஊரே யாவரும் கேளிர் என்பதற்கு ஏற்ப நம் கொள்கை, அனைத்து உழைக்கும் வர்க்கத்துக்கும் பயன்படுவதாக இருக்கும். இதுதான் நமது தொழிலாளர் நலக் கொள்கை.

இந்த நிகழ்ச்சியில் அமைச்சர் கே. ஏ. கே. பேசிய போது வாங்கிய கடனைத் திருப்பித்தருமாறு கேட்டுக் கொண்டார்.

கொடுத்த கடனை கேட்க அமைச்சர் வேண்டுமா என்று கூட நீங்கள் கருதுவீர்கள். கடனை திரும்பக் கொடுத்தவர்களை பாராட்டும்போது கொடுக்காதவர்களுக்கு கோபம் வரும் என்று நினைக்கலாம்.

## சிரிக்க அல்ல சிந்திக்க

இது சிரிக்க வைக்கும் கருத்து அல்ல சிந்திக்க வைக்கும் கருத்து.

இங்கே வெளியே 100 ஆட்டோ ரிக்ஷாக்களையும் நிறுத்தி வைத்திருக்கிறார்கள், பார்க்க அழகாக இருக்கிறது.

இதற்கு முன்னால் ஆட்டோ ரிக்ஷாக்களைப் பெற்றவர்கள் கடனை ஒரளவு திருப்பித்தந்ததால் தான் இவைகளை வாங்க முடிந்தது. இந்த நிகழ்ச்சி நடக்கிறது.

இப்போது வாங்கிக்கொள்ளும் 100 பேர்களும் கடனைச் சரியாக திருப்பித் தந்தால் மேலும் 100 பேர்களுக்கு 200 பேர்களுக்கு 2 ஆயிரம் பேர்களுக்கு தரமுடியும்.

நான் மட்டும்வாழவேண்டும்என்றுநினைக்கக்கூடாது நாம் வாழவேண்டும் என்று நினைக்கவேண்டும். நம் உழைப்பால் பலர் வாழ வேண்டும்.

அடுத்த முறை இதை விழா பெரிய விழாவாக இது இன்னும் பெரிய இடத்தில் வின்சென்ட் தலைமையிலேயே நடக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

வின்சென்ட்டே தலைவராக இருக்க வேண்டுமா என்று கேட்கலாம்.

மற்றவர்கள் ஏற்கும் நாட்கள் வரை அவ2 தலைவராக இருக்கலாம்.

## 32 ஆண்டுகளில் குடிநீர் பிரச்னை தீர்க்கப்பட்டதா?

நாட்டில் பல பிரச்னைகள் இருக்கின்றன. ஒரு நண்பர் இங்கே ஒரு மகஜரைத் தந்தார்.

100 வீடுகள் உள்ள அவரது ஊர்மக்களுக்கு குடிநீர் வேண்டும். 5 மைல்கள் சென்று குடிநீர் எடுத்துவர வேண்டியிருக்கிறது என்று அவர் குறிப்பிட்டு இருக்கிறார்.

சுதந்திரம் பெற்று 33 ஆண்டுகள் ஆகின்றன. இதற்குப்பிறகும் இந்தக் கோரிக்கை வருகிறது,

இதற்கு நாம் பொறுப்பு அல்ல. இதற்கு முன்பு ஆட்சியில் இருந்தவர்களிடம் இவர்கள் இவைகளைப் பற்றி கேட்கவில்லையா?

இன்று கூட இந்திரா காங்கிரஸ் தலைவர்கள்சிலர் என்னைவந்து சந்தித்தனர்.

அவர்களும் சில கோரிக்கைகளை தெரிவித்தனர். அதுபற்றிய விவரங்களை நான் இப்போது சொல்ல விரும்பவில்லை.

சென்னை நகரம் 50 ஆண்டுகாலமாக வளர்ந்து வருகிறது.

வளரும் தேவைக்கு ஏற்ப திட்டமிடவில்லை. தேவைக்கு ஏற்ப திட்டங்கள் அவ்வப்போது விரிவடைந்து வந்திருக்கிறது.

ஒரு சாலையைப் போட்டு விட்டுப் போவார்கள்.

அதன் பிறகு தொலைபேசிதுறையினர் - மின்சாரத்துறை - குடிநீர்துறை வடிகால்துறை போன்றவர்கள் குழாய் போட ரோடுகளைத் தோண்டுகிறார்கள். இதனால் பாதைகள் பாழாகிறது.

வெளிநாடுகளில் அப்படி கிடையாது. சாலைகளின் இரண்டு பக்கங்களிலும் மட்டுமே இப்படிப்பட்ட குழாய்களைப் போடுகிறார்கள். பாதையின் குறுக்கே போடுவதில்லை.

சென்னை நகரில்இப்படிப்பட்ட நிலையில் குழாய்களை அமைக்கவேண்டும்.

இவைகளை செய்ய சென்னை நகருக்கு ரூ. 50 கோடி செலவில் ஒரு திட்டத்தை உலக வங்கி உதவி மூலம் செயல்படுத்த இருக்கிறோம்.

ஆனால் உலக வங்கியினர் சென்னை நகருக்கு எங்கிருந்து குடிநீர் கொண்டு வரப்போகிறீர்கள் என்று கேட்கிறார்கள்.

கழிவுநீர் ஓடாமல் தேங்கும் நிலைக்கு மூலகாரணம் மாட்டுச் சாணம். போக்குவரத்துக்கு இடைஞ்சலாக மாடுகள் குறுக்கே வருகின்றன. மாடுகளையும் பார்க்க வேண்டி இருக்கிறது. வண்டியில் இருக்கும் உயிர்களையும் காக்க வேண்டி இருக்கிறது.

## மினி லாரிகளுக்கு பால் விநியோகம் செய்ய வாய்ப்பு

பால் விநியோகம் செய்ய மினி லாரிகளுக்கு வாய்ப்பு தரப்பட வேண்டும் என்று கேட்டார்கள். தர வேண்டியது தான். முறையாக- பாதுகாப்பாக பாலை விநியோகம் செய்ய முன்வந்தால்



மகிழ்ச்சி அடைவேன்.

மாடுகளைக் கொடுமைப் படுத்தினால்-புண்இருந்தால் அவைகளைப்பற்றி கண்காணிக்க சங்கம் இருக்கிறது.

ஆனால் மனிதனுக்கு உடலில் புண்ஏற்பட்டால்-புண்ணோடு ஆட்டோஓட்டமுடியுமா என்று பாதுகாக்க சங்கம் இருக்கிறதா?

அரசு தான் தனைக் கேட்கவேண்டும்.

ஆட்சிக் கேட்டால் மாட்டுச் சொந்தக்காரங்களுக்குக் கோபம்வரும்.

## மாடுகளுக்கு தனி இடம்

சென்னை நகரில் மாடுகளை வைத்திருக்க ஒரு தனி இடத்தை ஏற்பாடு செய்து அதற்கு சிறிய கட்டணம் விதிக்கலாம். இதை எத்தனை பேர் ஏற்பார்கள் என்று தெரியவில்லை.

ஆட்டோவில்மூவர்செல்ல அனுமதி கோரினார்கள். மூவரை ஏற்றிச் செல்ல ஆட்சேபம் இல்லை.

ஆனால் சில ஆட்டோ ரிக்ஷாக்கள் ஏதோ பந்தயத்தில்கலந்து கொள்பவர்கள் போல ஓட்டுகிறார்கள்.

வளைந்து வளைந்து ஓட்டுகிறார்கள். இதன் விளைவுகளைப் பார்க்கவேண்டும்.

வண்டியில் இருக்கும் உயிர்கள்- உங்கள் உயிர்- பாதுகாக்கப்பட வேண்டாமா?சிந்திக்கவேண்டும்.

மணிக்கு இத்தனைவேகம் தான் செல்ல வேண்டும் என்ற நிலைக்கு வரவேண்டும். உங்கள் உயிர் நாட்டுக்குத்தேவை.

## இரவில் அதிகக் கட்டணம்

இரவில் கட்டணம் கூடுதலாக வசூலிக்க அனுமதி கேட்டார்கள். அரசு அது பற்றி சிந்திக்கும்.

ஆனால் உங்கள் வண்டிகளில் பயணம் செய்யும் தாய்மார்கள் சகோதரிகளின் மானம் உங்கள் கையில் இருக்கிறது.

சமூக விரோதிகள் உங்கள் வண்டியைத் தாக்கினால் பாதுகாப்புக்கு உங்களிடம் என்ன ஆயுதம் இருக்கிறது? இதுபற்றி யாராவது கேட்பீர்கள் என்று பார்த்தேன். கேட்கவில்லை.

இது குறித்து நகரகாவல் துறை கமிஷனருடன் கலந்து பேசி முடிவு எடுங்கள்.

தேசத் துரோகிகள், வகுப்புக்கலவர' வாதிகள், மதக்கலவரம் செய்பவர்கள். நாட்டில் அமைதியை விரும்பாதவர்கள், ஆட்சி போடும் திட்டங்களைத் தடுக்கப் போராட்டம் நடத்துபவர்கள் இருக்கிறார்கள்.

ஆகவே வண்டியில் செல்பவர்கட்குப் பாதுகாப்பு இருக்கவேண்டும்.

## மதுவை தொடாதீர்

மதுவிலக்கு சட்டம் இருக்கிறது. ஆகவே வண்டியை ஓட்டும் போது மதுவைத் தொடாதீர்கள். என்று கேட்டுக் கொள்கிறேன்.

மதியை மது கெடுத்து விடும். ஆகவே மதுவைத் தொடாதீர்கள்.

தயவுசெய்து வண்டியை வேகமாக ஓட்டாதீர்கள். நேர்மையாக நடந்து கொள்ளுங்கள்.

சென்னை நகருக்கு எத்தனை ஆட்டோரிக்ஷாக்கள் தேவை? 2 ஆயிரம் தேவையாக இருக்கலாம் இங்கே 100ஆட்டோக்களைத் தந்து விட்டதால்பிரச்னை தீர்ந்து விடுமா?

இதற்கு எல்லாம் சிந்தித்து திட்டம் போட வேண்டும்.

ஒரே நாளில் தமிழகத்தில் குடிநீர் பிரச்சினையை தீர்த்து விட முடியுமா?

ஒரே நாளில் எல்லா இடங்களுக்கும் பஸ்கள் விடவேண்டும் என்றால் முடியுமா? அதற்கு பஸ்கள் வேண்டாமா? இறக்குமதி செய்ய முடியுமா?

இப்போது நாம் 69 ஊராட்சி ஒன்றியங்களை தன்னிறைவுத் திட்டத்தின் கீழ் எடுத்துள்ளோம்.

இந்த திட்டத்தை நிறைவேற்ற குழாய்கள் இல்லை.

இந்தத் திட்டத்தைப் போர்க்கால அடிப்படையில் செயல் படுத்தகருதி இருக்கிறோம்.

இந்தஆண்டு69ஒன்றியங்கள் அடுத்த ஆண்டு 100. 120 ஒன்றியங்கள் பிறகு மற்றவை எடுக்கப்படும்.

ஒரு ஊருக்கு பஸ் வரவில்லை என்றால் பஸ்களை மறியல் செய்வோம் என்று சொன்னால் பஸ் வந்து விடுமா?

இப்படி பஸ்களை மறியல் செய்தால் மற்றவர்கள் பாதிக்கப்படுவார்கள்.

இதற்கெல்லாம் திட்டமிட்டு செயல்பட வேண்டி இருக்கிறது.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

---

### முதல்வர் வேண்டுகோள்

# அவசரசட்டத்தை பயன்படுத்தும் நிலையை உருவாக்காதீர்கள்

**சென்னை, செப். 24-மத்திய அரசு பிறப்பித்துள்ள அவசரச் சட்டம்பற்றி முதல்வர் புரட்சித்தலைவர் கருத்து தெரிவித்துள்ளார். அந்தச் சட்டத்தை தமிழக அரசு வரவேற்கிறது. ஆனால் அதை பயன்படுத்தும் நிலையை உருவாக்காமல் மக்கள் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று கூறினார்.**

கலைவாணர் அரங்கில் நடந்த ஆட்டோ ரிக்ஷாக்கள் வழங்கும் விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர் கூறியதாவது:

தடுப்புக்காவல் அவசரச் சட்டத்தை மத்திய அரசு பிரகடனப்படுத்தி இருக்கிறது.

இது பற்றி பல அரசியல் கட்சித்தலைவர்கள் கருத்துக்களைத் தெரிவித்து இருக்கிறார்கள்.

தமிழக அரசைப் பொறுத்தவரைநாங்கள் அதை வரவேற்கிறோம்.

ஆனால் அந்தச்சட்டத்தை தமிழகத்தில் பயன்படுத்த வேண்டிய அவசியும் இல்லாத நிலையை உருவாக்க முயல்வோம்.

அதைப் பயன்படுத்த வேண்டிய அவசியத்தை இல்லாமல் செய்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

அந்த நிலையில் அவசரச் சட்டம் இருக்கும்.

ஆனால் கலவரம் செய்து- மக்களைக் கலவரம் செய்யத் தூண்டி மதத் துவேஷம், ஜாதிக்கலவரங்களைத் தூண்டிவிட்டு நாட்டு அமைதியைக் குலைத்து மக்களுக்குத் துன்பம் தரமுற்பட்டால் அப்படிப்பட்ட சிறு கூட்டத்தில் இருந்து மிகப் பெருவாரி மக்களைப் பாதுகாக்க வேண்டியது அரசின் பொறுப்பாகும் அப்போது இந்த சட்டம் பயன்புடுத்த வேண்டிய நிலைமை ஏற்படலாம்.

ஆனால் அந்த நிலையை உருவாக்க மாட்டார்கள் என்று நம்புகிறேன்.

வேண்டும் என்றே போராட்டம், போராட்டம் என்று நடத்தி நாட்டில் அமைதியை குலைத்து அதிகாரிகள் கவனத்தை வேறுபக்கம் திருப்ப விரும்புகிறவர்கள் பஸ்கள் மீது கற்களை எறிந்தால் என்ன ஆகும்.

பஸ்கள் ரிப்பேர் ஆகும். அதனைப் பழுது பார்க்க வேண்டிய நிலை ஏற்படும்.

இதனால் புதிய பஸ்கள் வருவது பாதிக்கப்படுகிறது இது யாருக்கு நட்டம்?

இதையெல்லாம் தெரியாமல் போராட்டம் போராட்டம் என்று நடத்தினால் அவசரச் சட்டம் இல்லாமல் எப்படித் தடுப்பது?

நாட்டில் திட்டங்கள் நிறைவேற அமைதி நிலவ வேண்டும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

---

தலைமைக் கழக அறிக்கை எண்: 98-80

## கிளைக் கழகத் தேர்தல் கண்காணிப்புக்குழு திருத்தப் பட்டியல்

### ராமநாதபுரம் மாவட்டம்

1. பொ. அன்பழகன், எம். பி.,
2. பி. தியாகராசன், முன்னாள் எம். பி.,
3. கே. கே. எஸ். எஸ். ஆர். ராமச்சந்திரன் எம்.எல். ஏ.
4. திருச்சி, தேவதாஸ்
5. எம். ஏ. ராஜ்குமார், எம். எல். ஏ.,
6. முசிறி, எம். கே. ராசமாணிக்கம், எம்.எல்.ஏ.
7. கரு. அன்புதாசன்
8. டி. பொன்னுசாமி, புகழூர்
9. ஆர். எம். பழனியப்பன்

எம்.எஸ். அப்துல்காதர்

சென்னை-14
24-9-80

தலைமை நிலையச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. க.

---

## தலைமைக் கழக அறிக்கை

எண்: 99/80

நெல்லை மாவட்டத்திற்கான கிளைக்கழகத்தேர்தல் கண்காணிப்பாளர் குழுவில் அங்கம் வகிப்பதாக அறிவிக்கப்பட்டிருந்த திரு. பண்ணை. சேதுராமன் அவர்களுக்குப் பதிலாக திரு. கே. எம். எஸ். சுப்பிரமணியம். எம். எல். ஏ. அவர்கள் பொதுச் செயலாளர் அவர்களால் நியமிக்கப்படுகிறார் என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

எம். எஸ். அப்துல்காதர்

சென்னை-14
24-9-80

தலைமை நிலையச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. க.

---

தலைமைக் கழக அறிக்கை எண்: 100-80.

## சேலம் மாவட்டம் ராசிபுரம் ஒன்றிய கழகத் தோழர்களுக்கு

கழகச் சட்ட திட்டங்களுக்கும், விதிமுறைகளுக்கும் விரோதமான செயல்களில் ஈடுபட்டு வருவதால் ராசிபுரம் ஒன்றிய அமைப்பாளர் எஸ், வரதராசன் அவர்கள் கழகத்திலிருந்து சாதாரண உறுப்பினர் பொறுப்பு உட்பட தற்காலிகமாக இன்றுமுதல் நீக்கி வைக்கப்படுகிறார். கழக சார்புமன்றத் தோழர்கள் யாரும் அவருடன் தொடர்பு வைத்துக் கொள்ளவேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறோம்.

மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்கள் ஒப்புதலுடனும், பொதுச்செயலாளர் திருமிகு. ப. உ. ச. அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

எச். வி. ஹண்டே

சென்னை 14,
24-9-80

அமைப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. க.

---

தலைமைக் கழக அறிக்கை எண்: 101/80

## மதுரை மாநகர கழகத்தோழர்களுக்கு

கழகச் சட்ட திட்டங்களுக்கும், விதிமுறைகளுக்கும் மாறுகச் செயல்பட்டு வருவதால் மதுரை மாநகர் 15-வது வட்ட அமைப்பாளர் திரு. லட்சுமணன் அவர்கள் இன்று முதல் கழகத்தில் இருந்து சாதாரண உறுப்பினர் பொறுப்பு உட்பட அனைத்துப் பொறுப்புகளிலிருந்தும் தற்காலிகமாக நீக்கிவைக்கப்படுகிறார். கழக, சார்புமன்றத் தோழர்கள் யாரும் அவருடன் தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறோம்.

மாண்புமிகு. புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும் பொதுச் செயலாளர் ப. உ. ச. அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

எச் வி ஹண்டே

சென்னை-14,
24-9-'80.

அமைப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. க.

---

## ஜேப்பியார் வேண்டுகோள்

சென்னை மாநகர கழக தொண்டர் அணியினர் அக்டோபர் 5ந் தேதி காலை 7மணிக்கு கோபாலபுரம் மாநகராட்சி திடலுக்குத் திரண்டு வரவேண்டுகிறேன். முக்கிய விஷயங்கள் குறித்து ஆலோசிக்க வேண்டி இருப்பதால் பயிற்சிபெற்ற தொண்டர்கள் அனைவரும் திரண்டு வருமாறு கேட்டுக்கொள்கிறேன்.

-ஜேப்பியார்

---

# ப. உ. ச. கடிதம்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

**அண்ணா சொல்விருந்தளித்தார்! புரட்சித்தலைவர் அயல் நாட்டவர் கண்களுக்கு விருந்தளித்தார்!**

இப்போது செல்பவர்கள் அத்தகைய எந்த சக்தியும் படைத்தவர்கள் அல்ல! இருந்தாலும் வெளிநாட்டில் கற்றுவர வேண்டியவற்றைக் கற்று வரட்டும்! சுற்றிப் பார்க்கட்டும்!

சில நாடுகள் சிருங்காரக் கலைக்கூடமாகத் தோன்றும்! கண்டுகளிக்கட்டும்! ஆனால் கையோடு மாதவியை அழைத்து வரமாட்டார்கள் என்று நம்புகிறேன்!

ஏதேதோ காரணங்களைக்காட்டி அயல்நாடு சுற்றப் போகின்றனர். அதிலே ஒரு குழு "அயல் நாடுகளில் நம் தூதுவர்களால் இந்தி எந்த அளவிற்கு வளர்க்கப்பட்டுள்ளது" என்று கண்டறிய சென்றுள்ளது!

அந்தக் குழுவில்-தி. மு. க., அ. இ. அ. தி. மு.க. உறுப்பினர்களும் அந்த உலகச்சுற்றுப் பயணக் குழுவில் சென்றுள்ளதாக செப்டம்பர் ஒன்பதாந்தேதி சென்னையில் வெளியான இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகையில் செய்தி வெளிவந்துள்ளது!

இந்தச் செய்தியைப் படித்ததும் "மொழிக் கொள்கையில் அண்ணா வழியினின்றும் மாறாதவர்கள்" என்று தங்களைச் சொல்லிக் கொள்ளும் கட்சியின் தலைவர் ஏதேனும் எழுதுவரரா என்று எதிர்பார்த்தேன்.

பாவம், அவருக்கு ஏகப்பட்ட வேலை! இதை ஒரு பொருட்டாகக் கருதவில்லை போலும்!

இந்தி மொழி வளர்ச்சி குறித்து ஆராய வெளிநாடு பயணமா? அப்படியென்றால் 'இந்தி' இந்தியாவில் வளர்ச்சி அடைந்து விட்டதா என்று கேட்கிறீர்கள்....அப்படியெல்லாம் கேட்பது போக்கிரித்தனம்!

இந்தி வளர்வது குறித்து பொறுமைப்படும் சிறுமதியாளர் அல்ல நாம்!ஆனால் வெளிநாடுகளில் அடைந்துள்ளவளர்ச்சி குறித்து அறிய நாடாளுமன்றத் தூதுக் குழு! அந்தக் குழுவில் தி.மு.க., அ.தி.மு.க. ஆகிய இரண்டு கட்சிகளைச் சார்ந்த உறுப்பினர்கள் இடம் பெற்றுள்ளனர் என்பதை எண்ணும்போது ஆச்சரியம் அல்ல; அதிர்ச்சி ஏற்படுகிறது!

தூதுக்குழு உலகைச் சுற்றி வருகிறது!

தி.மு.க. தலைவர் தன் கட்சியைச்சார்ந்த நாடாளுமன்ற உறுப்பினர்களுக்கு சென்னை 'உட்லண்ட்ஸ்' உணவு விடுதியின் விருந்து வைத்து அனுப்பியுள்ளார்!

அந்தக் குழுவில் தி. மு. க. இடம் பெற்றதற்கு நியாயம் கற்பித்து எழுதும் துணிவு அவருக்கு வரும் என்று நான் நினைக்கவில்லை. அவர் 'பாளையங்கோட்டை'யை மறந்திருக்க முடியாதே? 'மறதி' அறியாத மாவீரர்! இருந்தாலும் எப்படி தன் கட்சியினர் இந்தக் குழுவில் இடம்பெற அனுமதித்தார்? தெரியவில்லை!

இதைத் தமிழ் நாட்டு மக்களுக்குச் சொல்வது மட்டுமல்ல; அந்தக்குழுவில் தி. மு. க. கலந்து கொண்டு செல்லக்காரணம் என்ன என்பதை அவர் வாயால் வரவழைக்கச் செய்யவேண்டும்!

"உங்கள் கட்சியினர் போயிருக்கிறார்களே, என்ன காரணம்?" என்று நம்மைத் திருப்பிக் கேட்பார்கள்! நியாயமான கேள்வி!

அந்தக் குழுவில் இடம் பெற்றுள்ளவர்கள் பெயர்களைப் பாருங்கள் தி.மு.க சார்பில் திருப்பத்தூர் நாடாளுமன்ற உறுப்பினர் நண்பர் எஸ். முருகையன். இவர் இந்தியை எதிர்த்து சிறை சென்றவர்!

**அண்ணா திராவிட முன்னேற்ற கழக சார்பில் இடம் பெற்றிருப்பதாக அறிவித்திருப்பவர் பெயர் மாநிலங்களவை உறுப்பினர் திரு.வெங்கா.இவர் தி.மு.க.வில் சேர்ந்து இரண்டாண்டுகள் ஆகப்போகிறது!**

அ. இ. அ. தி. மு. க வில் இல்லை! இவரை நம் கட்சிப் பிரதிநிதியென்று எப்படி வெளியிட்டது அந்தப்பத்திரிகை என்று தெரியவில்லை!

ஆக நம் கட்சியினர் அந்தக் குழுவில் இடம்பெறவில்லை!

**'தி. மு. க. மொழிக்கொள்கையில் எங்கே போய்க்கொண்டிருக்கிறார்கள்' என்பதை நாட்டவருக்குச் சொல்வது நம் இன்றியமையாக் கடனாகும்!**

இந்தத் தவறை நம் கட்சி உறுப்பினர்கள் செய்திருந்தால் என்னென்ன எழுதி இருப்பார்கள்?

மொழிக் கொள்கையில் தி, மு. க.வின் போக்கை அந்தக் கட்சியில் உள்ள தொண்டர்கள் யோசிக்க வேண்டும்!

**யாரோடோ கூட்டுசேர, சேர்ந்த கூட்டு அறுந்துபடாதிருக்க மொழிக் கொள்கையை விற்றுவிட்டார்கள்!**

அடையாளந் தெரிந்து கொள்ளத்தான் இந்த விபரத்தை உங்கள் கவனத்திற்குக் கொண்டுவந்தேன்!

தி.மு.க.வில் கொள்கையை விட பதவி வெறி அதிகரித்து விட்டது!

இந்தி மொழி வளர்ச்சியைக் கண்டறிய உலகைச் சுற்றுகிறார்கள்!

சுற்றட்டும்! அவர்கள் உலகைச் சுற்றட்டும்! நாம் நம் நாட்டைச் சுற்றலாம்!

'காலம்' அவர்களை அடையாளங் காட்டி வருவதற்காக நன்றி!

அன்புள்ள

**ப. உ. ச.**

---

## அடியாரின் 'அண்ணா ஒரு காவியம்' நாடகம்

'நீரோட்டம்' அடியார் எழுதிய 'அண்ணா ஒரு காவியம்' என்ற நாடகத்தின் 2001-வது நாடகவிழா இம்மாதம் 28ந் தேதி ஞாயிற்றுக்கிழமை காலை 9மணிக்கு சென்னை கலைவாணர் அரங்கில் நடைபெறுகிறது.

## ஈராக்-ஈரான் பயங்கர யுத்தம்

### ★ விமானங்கள் குண்டு வீச்சு ★ ஈரான் நகரம் வீழ்ச்சி

# எண்ணெ நகரம் எரிகிறது

பாக்தாத், செப். 24- எண்ணெ உற்பத்தி நாடுகளான ஈரானுக்கும் ஈராக்குக்கும் யுத்தம் மூண்டுள்ளது. இருநாட்டு விமானங்களும் குண்டுவீச்சில் இறங்கியுள்ளன. ஈரான் நாட்டின் முக்கிய நகரத்தை ஈராக் பிடித்துக் கொண்டுள்ளது. அந்த நகரிலுள்ள எண்ணெ ஆலைகள் எரிகின்றன.

ஈரான் நாட்டை மன்னர் ஷாவிற்குப் பிறகு, அயதுல்லா கோமேனி ஆட்சி செய்து வருகிறார்.

ஈரானை ஒட்டியுள்ள பாரசீக வளைகுடாவில், ஹோர்முஸ் ஜலசந்தி உள்ளது.

ஓமன்வளைகுடாவுக்கு பாரசீக வளைகுடாவிலிருந்து கப்பல்கள் போகவேண்டுமானால் ஹோர்முஸ் ஜலசந்தி வழியாகத்தான் போகவேண்டும்.

ஆனால் ஈரான் நாடு ஹோர்முஸ் ஜலசந்திப் பாதையை அடைத்துக் கொண்டது. பாரசீக வளைகுடாவின் ஓரத்தில் உள்ள ஈராக் நாடு இதைக்கடுமையாகக் கண்டித்தது. போர்ப் பிரகடனம் செய்தது. ஈரானைத் தாக்க விமானங்களை அனுப்பியது. இதை எதிர்த்து ஈரான் போர் நடத்துகிறது. ஈரான்விமானங்கள் பாக்தாத் மற்றும் பல ஈராக் நகரங்களில் குண்டு வீச்சு நடத்தியது. இதில் ஏராளமான ஈராக் மக்கள் இறந்தனர். 3 அமெரிக்கர்களும் கொல்லப்பட்டார்கள்.

ஈரான் நாட்டுக்குச் சொந்தமான 67 விமானங்களை சுட்டு வீழ்த்தியதாக ஈராக் அறிவித்துள்ளது.

நேற்று நள்ளிரவிலும் பாக்தாத் மீது ஈரான் குண்டு வீசியதாக தகவல் கிடைத்துள்ளது.

ஈரானுக்குள் ஈராக் ராணுவம் 4 முனைகளில் முன்னேறிச் செல்கிறது. அபதான் என்ற எண்ணெ நகரில் ஈராக் விமானங்கள் குண்டு வீச்சு நடத்தியது. உலகில் மிகப் பெரிய எண்ணெ சுத்திகரிப்பு ஆலை இந்நகரில் உள்ளது. அந்த எண்ணெ ஆலை தீப்பற்றி எரிகிறது.

அந்த நகரையும் காசர்-ஏ-சிரின் என்ற நகரையும் பக்கத்திலுள்ள ஊர்களையும் ஈராக் தன்வசப்படுத்தி உள்ளது.

ஈரான் விமானங்கள் ராணுவ முகாம்கள் தவிர மக்கள் வசிக்கும் பகுதிகளிலும் குண்டு வீசுவதாக ஈராக் அறிவித்தது.

ஈரான் தாக்குதலால் ஈராக் ராணுவத்துக்கு எந்த பாதிப்பும் ஏற்படவில்லை என்று ஈராக் அறிவித்தது.

இருதரப்பு விமானங்களும் தொடர்ந்து யுத்தத்தில் ஈடுபட்டுள்ளன.

ஈராக் அதிபர் சத்தாம் உசேன் கூறுகையில்:

"ஹோர்முஸ் நீர் வழிப் பாதையை ஈரான் அடைத்துக்கொண்டு எங்களை மிரட்டியதால் போர்ப் பிரகடனம் செய்ய நேரிட்டது" என்றார்.

ஈரான்நாட்டின் தலைவர் அயதுல்லா கோமேனி கூறுகையில் "ஈரான்மீது ஈராக் தானாக போர்ப் பிரகடனம் செய்துள்ளது. விளைவுகளை ஈராக்தான் சந்திக்கவேண்டும்" என்றார்.

சட் அல் அரப் நீர்வழியில் இங்கிலாந்து கப்பல் மீது பீரங்கி தாக்குதல் நடந்தது. சில இங்கிலாந்து கப்பல்கள் பாதை மூடப்பட்டதால் அங்கேயே முடங்கிக் கிடக்கின்றன.

### ஐ.நா.கவலை

இந்த யுத்தம் உலக சமாதானத்துக்கே ஆபத்தானது என்று ஐக்கிய நாடுகள் சபை கவலை தெரிவித்துள்ளது.

யுத்தத்தை நிறுத்துவதற்கான முயற்சிகளில் ஐ. நா. பாதுகாப்பு சபை இறங்கியுள்ளது.

இந்தப் போரில் தாங்கள் நடுநிலைவகிக்கப்போவதாக அமெரிக்கா அறிவித்துள்ளது.

ஈரான், ஈராக் இரு நாடுகளிடமும் இந்தியா எண்ணெ வாங்குகிறது. இருநட்புநாடுகளும் யுத்தத்தில் ஈடுபட்டிருப்பது பற்றி இந்தியா கவலை அடைந்துள்ளது.

---

## சென்னை நகரில் பெண்களுக்குகூடுதல் போக்குவரத்து வசதி

### அமைச்சர் முத்துசாமி தகவல்

சென்னை, செப். 24- சென்னை நகரில் பெண்களுக்கு போக்குவரத்து வசதிகளை கூடுதலாக்கும் பொருட்டு, பெண்களுக்கு என 'ஜீப் பஸ்' விடலாம் என நான் கருதுவதாக போக்குவரத்துத் துறை அமைச்சர் முத்துசாமி கூறினார்.

போக்குவரத்துத் துறையில் வரலாறு காணாதவகையில் ஊதியஉயர்வு அளித்து சாதனை புரிந்த முதல்வர் புரட்சித்தலைவர் அரசிற்கும், போக்குவரத்துத் துறை அமைச்சருக்கும் பல்லவன் போக்குவரத்துக் கழக அண்ணா பொது நிர்வாகப்பணியாளர் சங்கம் சார்பாக பாராட்டுவிழா நடந்தது.

சங்கத்தின் சிறப்புத்தலைவர் ஏ. சி. சண்முகம் எம். எல். ஏ. தலைமை வகித்தார். அமைச்சர்முத்துசாமி பாராட்டுகளுக்கு நன்றி தெரிவித்து சிறப்புரையாற்றினார்.

கழக தொழிற்சங்க பிரிவுச் செயலாளர் வை.பெருமாள், சங்கத்தலைவர் இர. சுந்தரம், பொதுச்செயலாளர் வ.சி. பாலசுப்பிரமணியன் ஆகியோர் பாராட்டிப் பேசினர். சங்க பொருளாளர் சிவஞானம் நன்றி கூறினர்.



### கோரிக்கை மனு

சங்க சிறப்புத் தலைவர் ஏ.சி.சண்முகம் கோரிக்கை மனு ஒன்றை அமைச்சரிடம் வழங்கினார். தனசேகரன் அமைச்சருக்கு வாழ்த்து இதழினை வழங்கினார். பாலசுப்பிரமணியன் நினைவுப்பரிசு வழங்கினார்.

அமைச்சர் முத்துசாமி பேசுகையில் கூறியதாவது:

இங்கே எனக்கு அளித்த பாராட்டுக்கள் அனைத்தையும் முதல்வர் புரட்சித் தலைவர் காலடியில் சமர்ப்பிப்பேன். காரணம் அவர் ஊக்கம் கொடுத்ததால் தான் நான் இதைச் செய்ய முடிந்தது. எனவே பாராட்டுக்கள் அனைத்தும் அவருக்குத்தான் சொந்தம். எள்ளளவும் எனக்குச் சொந்தமல்ல.

பாராட்டு அளிக்கும் நேரத்தில் இங்கே கோரிக்கைகள் வைத்துள்ளீர்கள். விரைவில் உங்கள் கோரிக்கைகள் நிறைவேற்றப்படும்.

சூழ்நிலைக்கு ஏற்ப சம்பள உயர்வு அளித்துள்ளோம். பெரிய பிரச்சினைகளை முதலில் தீர்வு செய்வோம். பின்னர் படிப்படியாக மற்ற பிரச்சினைகளை களைவோம்.

உங்களது கோரிக்கைகளை ஏற்று அறிவிக்க ஆசையிருக்கிறது. நிர்வாகம், மற்ற சூழ்நிலைகளை நீங்கள் உணருவீர்கள்.

அவை எல்லாவற்றையும் நாம் கவனித்துப் பார்க்க வேண்டும்.

நிர்வாகச் செலவை தவிர்த்து வரும் பஸ் கட்டண உயர்வினைரத்து செய்யுங்கள் என்று யோசனை சொல்கின்றனர். நிர்வாக செலவினை குறைத்ததால் தான் தற்போது போக்குவரத்துக் கழகங்கள் லாபம் ஈட்டி வருகின்றன. இன்னும் நிர்வாகச் செலவைக் குறைப்பது என்றால் ஊழியர்களின் சம்பளத்தைத் தான் குறைக்க வேண்டும்.

பெண்களுக்குக்கூடுதலாக பஸ்கள் விடவேண்டும். இப்போது காலையிலும் மாலையிலும்தான் விடுகின்றனர். தனியாக ஜீப் சர்விஸ் மூலம் செய்யலாம் என்று என் கருத்தை நான் வெளியிட்டேன்,

இதை சிலபத்திரிகைகள் 'பெண்களுக்கான தனிபஸ் ரத்து ஆகும்' என்று தலைப்பிட்டு செய்தி வெளியிட்டன. ஆனால் உள்ளே நான் சொன்ன விளக்கம் இருக்கிறது.

### விபரீத உணர்வு

தலைப்பு மட்டும் அப்படிப்பட்ட உணர்வோடு இருக்கிறது. இதையெல்லாம் தொழிலாளர்கள் உணர வேண்டும்.

ஒற்றுமையாக இருந்தால் தான் நல்ல காரியங்களை ஆற்றமுடியும். வாழ்வு ஒளிமயமாக இருக்கும். சுமுகமான உறவு இருந்தால் எல்லாம் வளரும். நாடு வளர்ச்சி அடையும்.

நான்கு ஐந்து நாட்களில் பேச்சுவார்த்தை முடிந்து நல்ல ஒப்பந்தம் ஏற்பட்டது என்று சொன்னார்கள். வேலைநிறுத்தம், நஷ்டம் ஏற்படாமல் இருக்கவே இந்த நடவடிக்கையை நாங்கள் எடுத்தோம்.

எந்தக் கட்சி தொழிற் சங்கமாக இருந்தாலும் அவை நல்லமுறையில் எங்களுடன் துணை புரிந்து நல்ல ஆதரவை தந்தன.

எந்த ஒப்பந்தம் ஏற்பட்டாலும் அதற்கு முன் அடிதடி பிரச்சினை வரும். ஆனால் இப்போது அந்தப் பிரச்சனையே வரவில்லை என்று தொழிற் சங்கத் தலைவர்கள் கூறினார்கள்.

அரசின் முயற்சிகளுக்கு தொழிற் சங்கங்கள் தொடர்ந்து ஒத்துழைப்பு தரவேண்டும்.

இவ்வாறு போக்குவரத்து அமைச்சர் முத்துசாமி பேசினார்.

---

### அண்ணா ஆட்டோ ரிக்ஷா சங்கத்துக்கு

## 100 ஆட்டோக்களை வழங்கினார் முதல்வர் புரட்சித்தலைவர்

சென்னை, செப். 24- அண்ணா ஆட்டோரிக்ஷா ஓட்டுநர்கள் தொழிற்கூட்டுறவு சங்க உறுப்பினர்களுக்கு 100 ஆட்டோ ரிக்ஷாக்களையும், 5 மினி லாரிகளையும் முதல்வர் புரட்சித்தலைவர் நேற்றிரவு வழங்கினார்.

இந்த விழா நேற்றிரவு கலைவாணர்அரங்கில் நடைபெற்றது.

விழாவுக்குசங்கத்தலைவர் நாஞ்சில் வின்செண்ட் (எம் எல்.ஏ.) தலைமை வகித்தார்.

இந்த விழாவில் அமைச்சர்கள் கே.ஏ.கே, ராகவானந்தம், எஸ். முத்துசாமி ஆகியோர்கலந்து கொண்டு உரை ஆற்றினார்கள்.

விழாவின் துவக்கத்தில் சங்க இயக்குநர் மு. அன்புத்தம்பி வரவேற்புரை நிகழ்த்தினார்.

ஆட்டோ ரிக்ஷா டிரைவர்களுக்கு தவணைமுறையில் வீடுகளை ஒதுக்கித்தர வேண்டும்.

ஆட்டோ ரிக்ஷாவில் மூவர் செல்ல அனுமதி தரவேண்டும்.

இரவு 10 மணிக்குமேல் காலை 6 மணிவரை மீட்டர் கட்டணத்துடனும் மேலும் பாதிக்கட்டணம் வசூலிக்க அனுமதி தரவேண்டும்.

ஆட்டோ ரிக்ஷா டிரைவர்களால் தவறு இல்லாமல் ஏற்படும் விபத்தில் கை,கால்,கண்களைஇழக்கும் டிரைவர்களுக்கு ரூ.5 ஆயிரம், உயிர் இழந்தால் ரூ10 ஆயிரம் அரசு தரவேண்டும் என்று 4 கோரிக்கைகளை அன்புத்தம்பி வெளியிட்டார்;

விழாவுக்குத் தலைமை வகித்த நாஞ்சில் வின்செண்ட் கூறியதாவது:-

இந்த தொழிற் கூட்டுறவு சங்கத்தை 1974ம் ஆண்டு துவக்க முயற்சி எடுத்தோம். ஆனால் அப்போது இருந்த கருணாநிதி ஆட்சிஇதைப் பதிவுசெய்ய மறுத்துவிட்டது.

பிறகு 1976ல் இந்த சங்கம் பதிவுசெய்யப்பட்டது.

110 உறுப்பினர்களாக இருந்த சங்கத்தில் இப்போது 260 உறுப்பினர்கள் இருக்கிறார்கள்.

இந்த சங்கம் லாபத்தை ஈட்டிவருகிறது. 1977-78ல் ரூ. 19 ஆயிரமும், 78-79ல் ரூ. 23 ஆயிரமும், 79-80ல் ரூ 57 ஆயிரமும் லாபம் ஈட்டி இருக்கிறது.

இந்த ஆண்டு ரூ. 75 ஆயிரம் லாபம் வரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. வருகிற லாபத்தில் கடந்த ஆண்டு சங்க உறுப்பினர்களுக்குடெரிகாட்டன் பேண்ட் சர்ட் வாங்கித் தரப்பட்டது. இந்தஆண்டு எச். எம். டி வாட்ச் வாங்கித்தர ஆலோசித்து வருகிறோம்.

கடனையும் தவணைக் காலத்தில் கட்டி வருகிறோம்,

பால் வழங்குவதற்கு எங்கள் மினி லாரிகளுக்கு வாய்ப்புத் தரவேண்டும்.

இவ்வாறு நாஞ்சில் வின்செண்ட் கூறினார்.

---

### பஸ் ஊழியர் ஊதிய ஒப்பந்தத்தில் கையெழுத்து போட்டுவிட்டு அதை

## விமர்சிப்பது தகுமா? தி.மு.க. சங்கத்துக்கு பெருமாள் கண்டனம்

சென்னை, செப். 24- பஸ் ஊழியர் ஊதிய உயர்வு பேச்சு வார்த்தையில் கலந்து கொண்டு கையெழுத்து போட்டுவிட்டு அந்த ஒப்பந்தத்தைப் பற்றி விமர்சிப்பது தகுமா என்று தி. மு. க. தொழிற்சங்கத்துக்கு கழக தொழிற்சங்கப் பிரிவுச்செயலாளர் வை. பெருமாள் கண்டனம் தெரிவித்தார்.

போக்குவரத்து அமைச்சர் முத்துசாமிக்கு அளித்த பாராட்டுக் கூட்டத்தில் கலந்துகொண்டு கழக தொழிற் சங்கப்பிரிவுச் செயலாளர் வை.பெருமாள் கூறியதாவது:

குறிப்பறிந்து பால் ஊட்டும் தாயைப்போல, தொழிலாளர்களின் குறைகள் அறிந்த நேரத்தில் அவற்றை நீக்கி செயல்பட்டு வருபவர் அமைச்சர் முத்துசாமி.

புரட்சித்தலைவரின் புதிய அணுகுமுறையில் தொழிலாளர் பிரச்சினைகள் தீர்க்கப்பட்டுவருகின்றன.

பழைய ஒப்பந்த காலம் முடியும் முன்பே புதிய ஒப்பந்தம் செய்யப்படுகின்றன. அந்த வகையில் 65 ரூபாயிலிருந்து 115 ரூபாய் வரை பஸ் தொழிலாளர்களுக்கு ஊதிய உயர்வு தரப்பட்டது.



### பத்து பைசாவா? பத்து ரூபாயா?

முந்தைய திமுக ஆட்சியிலும் ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டது. அப்போது 10 விரல்களைக்காட்டினார்கள். ஒருவேளை 10 ரூபாய் உயர்வு அளிப்பார்களோ என்று நினைத்தோம். ஆனால் 10 பைசா உயர்வு என்றனர். அந்தஒப்பந்தம் எங்கே. இன்று சராசரியாக 90லிருந்து 100 ரூபாய் வரை ஊதிய உயர்வு பெற்றனரே அந்த ஒப்பந்தம் எங்கே!

புரட்சித் தலைவர் ஆட்சியில் தொழிலாளர்கள் கோரிக்கைகள் எப்படித் தீர்க்கப்படுகின்றன என்பதை தொழிலாளர்கள் பார்க்கவேண்டும்.

பஸ்தொழிலாளர்ஊதிய உயர்வு ஒப்பந்தம் நடந்த போது ஒரு தொழிற்சங்க தலைவர் ஒரு அச்சத்தை தெரிவித்தார்.

என்ன எடுத்தவுடனே அமைச்சர் இதில் தலையிடுகிறார்! அதிகாரிகளுடன் பேசி முடித்த பின்னர் தானே அமைச்சர் பேச வேண்டும்? அவர் முதலிலேயே தலையிடுகிறாரே இது நடக்கக் கூடிய காரியமா! என்று என்னிடம் சொன்னார்.

புரட்சித்தலைவர் சொன்னால் அதற்கு ஆயிரம் பொருள் இருக்கும். அதில் ஒன்றைக் கூட உங்களால் புரிந்துகொள்ள முடியாது. முடிவுகளைப் பற்றி நீங்கள் கவலைப் படாதீர்கள் என்று நான் சொன்னேன்.

எல்லா தொழிற் சங்கத் தலைவர்களும் பாராட்டும் வண்ணம் ஊதிய உயர்வை அமைச்சர் முத்துசாமி வழங்கியிருக்கிறார்.

தொழிற்சங்கத் தலைவர்கள் மத்தியில் குடும்ப பாசத்தை ஊட்டி வளர்ப்பவர் அவர் என்று காங்கிரஸ் இயக்கத்தைச் சேர்ந்த தொழிற்சங்கத் தலைவர்கூட சொல்லியிருக்கிறார்.

போக்குவரத்துத் தொழிலாளர்களின் இன்னும் பல கோரிக்கைகள் குறித்தும் பேசியிருக்கிறோம். நல்ல முடிவுகள் வரவிருக்கின்றன.

போக்குவரத்து ஊழியர் ஊதியஉயர்வுஒப்பந்தத்தில் அனைவரும் கையெழுத்திட்டுள்ளனர். சுப்புவும் பேச்சு வார்த்தையில் கலந்து கொண்டார்.

நகல் ஒப்பந்தத்தில் சபாபதி கையெழுத்துப் போட்டிருக்கிறார். இப்போது நான் கையெழுத்துப் போடவில்லை என்கிறார். அதை அவர் நிரூபிக்கத் தயார?

டிராப்ட் ஒப்பந்தத்தில் கையெழுத்து போடுகிறார்கள். வெளியே வந்து விமர்சனம் செய்கிறார்கள். இது தகுமா?

அரசியல்ஆதாயம் தேடுபவர்களிடம் தொழிலாளர்கள் பலியாகக்கூடாது.

தொழிலாளர்களுக்கு நியாயமானவைகளை நிறைவேற்ற புரட்சித் தலைவர் அரசு தயாராக இருக்கிறது.

இவ்வாறு கழக தொழிற் சங்க பிரிவுச் செயலாளர் வை. பெருமாள் பேசினார்.

---

### மாலை முரசின்

## பொய் செய்தி: சண்முகம் எம். எல், ஏ. மறுப்பு

சென்னை, செப். 24- செங்கை மாவட்டம் கடம்பத்தூரில் ஏற்பட்ட கோஷ்டி மோதலைப் பற்றி தான் பேட்டியளித்ததாக மாலை முரசு 18ந்தேதி இதழில் வெளியிட்டுள்ள செய்தி தவறானது என்று திருத்தணி இரா. சண்முகம் எம்.எல்.ஏ கூறியுள்ளார்.

மேலும் அவர் கூறியிருப்பதாவது :

இந்த சம்பவம் பற்றி எந்த பத்திரிகையின் நிருபரும் என்னை சந்தித்துவிவரம் கேட்கவில்லை. என்னிடம் எதுவும் கேட்காமலே தவறான முறையில் நான் கூறியதாக வெளிவந்துள்ள செய்திக்கும் எனக்கும் சம்பந்தமில்லை.

இவ்வாறு தவறான செய்தியைத் தந்த அந்த பத்திரிகை மறுப்பு வெளியிடாவிட்டால் முறைப்படி சம்பந்தப்பட்டவர்கள் மீது வழக்குத் தொடர இருக்கிறேன்.

இவ்வாறு இரா, சண்முகம் கூறியுள்ளார்.

---

### தி. நகர் தொகுதி முழுவதும்

## நடந்த பேரறிஞர் அண்ணா பிறந்தநாள் விழாக்கள்

சென்னை, செப். 24- தியாயகராய நகர் தொகுதி முழுவதிலும் பல்வேறு இடங்களில் பேரறிஞர் அண்ணாபிறந்தநாள் விழாக்கள் நடந்தன இதை ஒட்டி கழகக் கொடிகள் ஏற்றி இனிப்புகள்வழங்கப்பட்டன.

111வதுவட்டத்தில்நாராயணன் தலைமையிலும் 109வது வட்டத்தில் ஏகாம்பரம் தலைமையிலும் 121வது வட்டத்தில் நடராசன் தலைமையிலும் 119வது வட்டத்தில் பேரறிஞர் அண்ணா நினைவு மன்றம்சார் பி எஸ். லட்சுமணன் தலைமையிலும் அண்ணா பிறந்தநாள் விழாக்கள் நடந்தன.

அன்னை சத்தியா காய்கறி அங்காடி முன்பு மதன் உமாபதி தலைமையில் அண்ணா பிறந்தநாள் விழா நடந்தது. குடிசைமாற்று வாரியத்தலைவர் டி. கே. கபாலி எம். எல். ஏ. கொடியேற்றினார். பி. கே. முத்துராமலிங்கம் இனிப்பு வழங்கினார்.

கு.க. செல்வம், தி. நகர் மூர்த்தி, எஸ். சண்முகம், தட்சிணாமூர்த்தி, ஆர்.ராமலிங்கம் சாமிநாதன் மு. சக்தி, சிம்சன்மோகன், டி. ஜி. சற்குணம், கலியமூர்த்தி ஆகியோர் கலந்து கொண்டனர்.



---

### வில்லிவாக்கத்தில் அன்னை சத்தியா மன்றம்

## சார்பில் நடந்த அண்ணாவிழா

சென்னை, செப். 23- சென்னை 32-வது வட்டம், வில்லிவாக்கத்திலுள்ள அன்னை சத்தியா நினைவு மன்றம் சார்பாக தந்தை பெரியார் பேரறிஞர் அண்ணாபிறந்தநாள்விழாக்கள் நடந்தன.

கொ. அ.ஜார்ஜ் தலைமை வகித்தார். கழக சட்ட மன்ற உறுப்பினர் ஜெ. சி. டி. பிரபாகரன் கழக கொடிகளை ஏற்றி வைத்தார்.

ஏ. பாபுசையத் உணவு வழங்கினார். செ. ஞானப்பிரகாசம், கொ.ஜெயபால் டி. சண்முகம், ஜெ நாராயணன், ஒய். ராமச்சந்திரன், கே. வெங்கடேசன், கொ. அ. உதயன், வி. எல் மணவாளன் ஆகியோர் கலந்து கொண்டு பேசினர்.

---

## கழகத்தில் இணைந்த புதுவை தொழிற்சங்கத்தினர்

பாண்டிச்சேரி, செப். 24- புதுவை மாநில ரிக்ஷா தொழிலாளர் சங்கத்தினர் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

புதுவை மாநில ரிக்ஷா தொழிலாளர் சங்கத்தின் மாநில பொருளாளர் எஸ். முத்தரசு அந்தச் சங்கத்திலிருந்து விலகினார்.

புதுவை வந்திருந்த அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன், அண்ணா தொழிற்சங்க பேரவை பொதுச்செயலாளர் வை. பெருமாள் தலைமைநிலையச் செயலாளர் எம். எஸ். அப்துல்காதர் மற்றும் புதுவை மாநில பொருளாளர் பி. கே. லோகநாதன், ஆகியோர் முன்னிலையில் கழக தொழிற் சங்கத்தில் இணைந்தார். எம். பி. நந்தன் தலைமையின் கீழ் செயல்படும் புதுவை மாநில அண்ணா ரிக்ஷா தொழிலாளர் சங்கத்தில் அவர் சேர்ந்தார்.

மற்றும் தாஸ், ஜோசப், சுப்பிரமணி ஆரோக்கியநாதன், பச்சையப்பன், அன்புஅருணாசலம் ஆரோக்கியதாஸ், ராமலிங்கம் ஆகியோர் மற்றும் 35 தோழர்களும் கழகத்தில் சேர்ந்தனர்.

---

## உதவி நிதித் திட்டம் அரசியல் விளம்பரம்: லோகநாதன் கருத்து

புதுவை மாநில கழக பொருளாளர் பி. கே. லோகநாதன் ஒரு அறிக்கையில்கூறியிருப்பதாவது:

புதுவை முதலமைச்சர் டி. ராமச்சந்திரன் பட்டதாரிகளுக்கு மாதம் 50 ரூபாய்அளிக்க மந்திரிசபையில் முடிவெடுத்திருப்பதாக கூறியிருக்கிறார்.

இந்த முடிவு காலம் கடந்த முடிவாகும்.

தமிழகத்திலுள்ள அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக அரசு வேலை வாய்ப்பற்ற பட்டதாரிகளுக்கு மாதம் 50 ரூபாய் உதவிப்பணம் கொடுப்பதாக அறிவித்தது. அறிவிக்கப்பட்ட தேதியிலிருந்து 3மாதம் முன்தேதியிலிருந்து இது அமலுக்கு வருவதாகவும் அறிவித்துள்ளது. புதுவை தி.மு.க.கூட்டணி ஆட்சி இந்தத் திட்டத்தை அறிவித்துள்ளது சுய விளம்பர அரசியல் லாபத்திற்காகத்தான்.

தி.மு.க. கூட்டணி மந்திரி சபை அறிவித்த திட்டத்தை நிறைவேற்ற மத்திய அரசிடம் போராடி இதற்காகப் போதிய நிதி தொகை பெற தைரியம் இல்லை.

இவ்வாறு பி. கே. லோகநாதன் அறிக்கையில் கூறியுள்ளார்.

# அண்ணா










Published by K. Ravindran on behalf of Thangamani Publications, 275, Avvai Shanmugam salai, Madras-14 and printed by him at Print House, 1, First Main Road, United India Colony, Madras-24. Editor: E. PARASURAMAN.


வெளிநாடு செல்லும்

# தமிழக எம்எல்ஏக்கள்: மாலை அணிவித்து முதல்வர் வாழ்த்து

சென்னை, செப். 24- வெளிநாடு பயணமான தமிழக சட்டமன்ற உறுப்பினர்களுக்கும் மேலவை உறுப்பினர்களுக்கும் முதல்வர் புரட்சித்தலைவர் மாலை அணிவித்து வழியனுப்பி வைத்தார்.

சட்டமன்ற கழக உறுப்பினர்கள் நாஞ்சில் வின்சென்ட், துரை ராமசாமி, டாக்டர் சமரசம், ஏ. சி. சண்முகம், ஆறுமுகம், தாமரைக்கனி, ஜி. கே. சுப்பிரமணியம், சின்னசாமி, வேணுகோபால், மேலவை கழக உறுப்பினர்கள் அனகாபுத்தூர் சி. ராமலிங்கம், இ. எஸ். வெங்கடேசன் ஆகியோரும் இ. காங்கிரஸ் எம். எல். ஏ-க்கள் உ. சுப்பிரமணி மணியம், சுந்தரம், திமுக எம். எல். ஏ-க்கள் நெல்லிக்குப்பம் கிருஷ்ணமூர்த்தி, துரைமுருகன், புருஷோத்தமன், இ. காங்கிரஸ் எம். எல். சி. ஏ. ஜே. தாஸ், தமிழ்நாடு மேலவை செயலாளர் ராமசாமி ஆகியோரும் இன்று காலை வெளிநாடு புறப்பட்டுச் சென்றனர்.

## 18 பேர்

வெளிநாடுகளில் சட்டசபைகள் எப்படி செயல்படுகின்றன என்பதை நேரில் கண்டறியவும் அந்த நாடுகளின் கலாச்சாரத்தை தெரிந்து கொள்ளவும், 18 பேர் அடங்கிய சட்டமன்ற உறுப்பினர்கள் தூதுக்குழு வெளிநாடு சென்றது. முதலில் மலேசியாவில் உள்ள கோலாலம்பூர் செல்கின்றனர். அங்கிருந்து பாங்காக், ஜப்பான் ஹாங்காங், சிங்கப்பூர் செல்கின்றனர்.

வருகிற மாதம் 15ந்தேதி சிங்கப்பூரிலிருந்து விமானம்மூலம் தமிழகம் திரும்புகின்றனர்.

## சிறப்பான வழியனுப்பு

இன்று காலை வெளிநாடு பயணமான தமிழக சட்டமன்ற உறுப்பினர்கள் சென்னை விமான நிலையத்தில் சிறப்பாக வழியனுப்பி வைக்கப்பட்டனர்.

இன்று காலை 7.25 மணிக்கு முதல்வர் புரட்சித்தலைவர் மீனம்பாக்கம் விமான நிலையம் வந்தார். வெளிநாடு பயணமான அனைத்து சட்டமன்ற மேலவை உறுப்பினர்களுக்கும் முதல்வர் புரட்சித்தலைவர் மாலை அணிவித்து வாழ்த்துக்கள் கூறி வழி அனுப்பி வைத்தார்.

அமைச்சர்கள் கே. ஏ. கே., ஹண்டே, முத்துசாமி, விஜயசாரதி ஆகியோரும் விமான நிலையம் வந்து அனைவருக்கும் மாலை அணிவித்து வழி அனுப்பினர்-

தலைமைக் கழகத்தின் சார்பில் எம். எஸ். அப்துல் காதர் அனைவருக்கும் மாலை அணிவித்தார்.

கழக தொழிற்சங்கப்பிரிவு செயலாளர் வை. பெருமாள் அனைவருக்கும் கைத்தறி ஆடைகளை அணிவித்தார்.

பாண்டிச்சேரி கழக பொருளாளர் பி. கே. லோகநாதன், தலைமைக் கழக பொறுப்பாளர் துரை திரளான சட்டமன்ற உறுப்பினர்கள் மேலவை உறுப்பினர்கள் கழக மன்ற சார்பு மன்ற செயல் வீரர்கள் விமான நிலையத்தில் திரண்டிருந்து வெளிநாடு பயணமான சட்டமன்ற உறுப்பினர்களை வழியனுப்பி வைத்தனர்.

இன்று காலை 8 மணிக்கு புறப்பட்ட கோலாலம்பூர் செல்லும் விமானத்தில் அனைவரும் சென்றனர்.

# நடிகை ஷோபா மரணம்: போலீசார் மீண்டும் விசாரணை

சென்னை, செப். 24 - நடிகை ஷோபா தற்கொலை செய்துகொண்டாரா அல்லது கொலை செய்யப்பட்டாரா என்பதை மீண்டும் விசாரணை நடத்தும்படி சி. ஐ. டி. போலீசாருக்கு தமிழக போலீஸ் டைரக்டர் ஜெனரல் டி. டி. பி. அப்துல்லா உத்தரவிட்டுள்ளார்.

ஷோபா பிணமாக கிடந்த வீட்டை டைரக்டர் ஜெனரல் அப்துல்லாவும் ஐ. ஜி. பரமகுருவும் நேரில் சென்று பார்வையிட்டனர்.

சில மாதங்களுக்கு முன்பு ஷோபா தன் வீட்டின் படுக்கையறையில் தூக்கில் பிணமாக தொங்கினார். அந்த அறை உள்பக்கம் தாழிடப்பட்டிருந்தது. ஊர் பஞ்சாயத்தார் ஷோபா தூக்கு போட்டு தற்கொலை செய்து கொண்டார் என்று தீர்ப்பு கூறினர்.

போலீசாரும் விசாரணையில் ஷோபா தற்கொலை செய்து கொண்டார் என்று தெரிவித்தனர்.

ஆனால் ஷோபாவின் மரணத்தில் தனக்கு சந்தேகம் இருப்பதாகவும், அவர் கொலை செய்யப்பட்டிருக்கலாம் என்றும் ஷோபாவின் தாயார் பிரேமா தெரிவித்தார். இதுசம்பந்தமாக பிரேமா பிரதமர் இந்திரா காந்திக்கும் உயர் போலீஸ் அதிகாரிகளுக்கும் மனு அனுப்பினார்.

இதையொட்டி ஷோபா மரணம் பற்றி மறு விசாரணை நடத்த உத்தரவிடப்பட்டுள்ளது,

ஷோபா இறந்தவீட்டை டைரக்டர் ஜெனரல் டி. டி. பி. அப்துல்லாவும், ஐ. ஜி. பரமகுருவும் நேரில்சென்று பார்த்தனர். ஷோபா பிணமாக கிடந்த இடம், கதவு சன்னல் முதலியவற்றை பார்வையிட்டனர்.

இந்த வழக்கை ரகசிய போலீசார் மறு விசாரணை செய்வார்கள்.

கீவளூர் ஊராட்சி ஒன்றியத்தில்

# அண்ணா பிறந்த நாள் விழா

திருவாரூர், செப். 24- கீவளூர் ஊராட்சி ஒன்றியத்தில் ஆந்தக்குடி, நாகலூர், தென்மருதூர், ஆகிய இடங்களில் அண்ணா பிறந்தநாள் விழா சிறப்பாக கொண்டாடப்பட்டது. இந் நிகழ்ச்சிகளில், திருவாரூர் தென்கோவன், கீவளூர் ஒன்றிய கழக அமைப்பாளர், நடராஜன் ஆகியோர் பங்கேற்று கழகக் கொடிகளை ஏற்றுவித்தனர்.